# ஆஸ்திக நாஸ்திகம்.

கடவுள் உண்டென்பவர் ஆஸ்திகரும்; கடவுள் இல்லையென்பவர் நாஸ்திகருமாகச் சொல்லப்படுவது எவருமறிந்த சங்கதிதான். ஆஸ்தியென்பதன் பொருள் உண்டு; நாஸ்தியென்பதன் பொருள் இல்லை. பொதுவாய் உண்டு இல்லை யென்றிருப்பதால் ஆஸ்தி யென்பதற்குக் கடவுள் உண்டு என்றும், நாஸ்தியென்பதற்குக் கடவுள் இல்லையென்றும் எங்ஙனங் கூறத்தகும்? அப்படிக்கூறுங்கால் ஆஸ்தியென்னும் பதத்திற்குப்பொருளுண்டு, புத்திரருண்டு, மனைவியுண்டென்றும், நாஸ்தியென்னும் பதத்திற்கு அவைகளில்லையென்றும் கூறலாமே யென்னின் கூறப்படாது; அவ்வாறு கூறுதல் உலக வழக்கின்மையா னென்க. அன்றி எந்த மதஸ்தரும் எந்தத்தேசத்தாரும் எக்காலத்தாரும் எப்பாஷையாரும் எந்நூலாரும்ஆஸ்தி எனபதன்பொருள் கடவுளுண்டென்றும், நாஸ்தி என்பதன் பொருள் கடவுளில்லையென்றும் ஒத்துக்கொண்டிருக்கிறார்கள்.

ஆஸ்திகர், காணப்படுஞ் சேதனாசேதன வுலகிற்கு முதன்மையான பொருளுண்டென்றும், நாஸ்திகர் அப்படிப்பட்டபொருளொன்றில்லையென்றும் உலகமொன்றுமாத்திர முண்டென்றும் சொல்லுகின்றார்கள். இவ்விருவருள் ஆஸ்திகரும் பல பிரிவினையுடையார்; நாஸ்திகரும் பல பிரிவினையுடையார். ஷை ஆஸ்திகர் பலபிரிவினையுடையாரேனும் இங்கு அவரை இருபிரிவினை யுடையாராக்கிப் பேசுவாம்.

முதல்பிரிவு ஆஸ்திகர்கொள்கை:—எங்கும் பரிபூரணரானகடவுளொருவரே முக்காலத்துமுள்ள சத்துப்பொருள். மற்றச் சேதனாசேதன வுலகப்பொருள் தோற்றல் மாத்திரையாயுள்ள அசத்து அல்லது சத்துப்போலியா யுள்ளதாம்.

இரண்டாவதுபிரிவு ஆஸ்திகர் கொள்கை:—எங்கும் பரிபூரணரான கடவுளும், அவரிடத்தில் சேதனாசேதன வுலகமும் முக்காலத்துமுள்ள சத்துப்பொருள்களாம்.

இனி இவ்விரண்டையும் பற்றி விசாரிப்பாம். இரண்டாவதுகொள்கையின் பிரகாரம் கடவுளுக்குச் சத்துத் தன்மையும் அதனுடன் பரிபூரணமுங்கூறி, அந்தக்கடவுளினிடத்து, அக்கடவுளைப் போன்று சத்தாகச் சேதனாசேதன வுலகமுமிருக்கின்றதென்னின் எங்ஙனம் பொருந்தும்? ஒரு பாத்திரத்தினிறைய நீர்வார்த்து அதிலொருகல்லைப் போட்டால் ஷை கல்லளவு நீர் வெளிப்படுவது கண்கூடு. நீரை வெளியிலூற்றிவிட்டால் அந்தவிடத்தில் வாயுசென்று நிரப்பிக்கொள்ளுகின்றது. நிரம்பியபின் அப்பாத்திரத்தில் மீண்டும் நீரைவார்த்தால் எவ்வளவு நீர் உள்ளே செல்லுகின்றதோ, அவ்வளவு வாயு வெளியில்

வந்து விடுகின்றது. நீரும் சத்துப்பொருள், வாயுவும் சத்துப்பொருள் ஆகலின் இரண்டு பொருள்களும் ஒன்றிருந்த இடத்தி லொன்றிராமல் விலகிப்போகின்றன. இதனால இரண்டு சத்துப்பொருள்கள் ஒரு இடத்தி லிராவென்பது திண்ணமெனத் தெரிகிறது. இங்ஙனமே பரிபூரணமும் சத்துமான கடவுளினிடத்துப் பிறிதொரு சத்துப்பொருளிருத்த லமையாது. அமையாதாகவே ஷை வாதம் பொருத்தமில்லாவாதமாய்ப் போமென்றறிக. ஷை இருபொருள்களுஞ் சத்தாகச் சொல்ல வேண்டுமானால்சொல்லலாம். அவ்வாறு சொல்லுங்கால்கடவுளுக்குப் பரிபூரணஞ் சொல்வதைத் தவிர்த்துக் கண்டப்பொருளக்கிக் கடவுளுமுலகுமிருக்கின்றனவாகச் சொல்லவேண்டும். அப்படிச் சொல்லுவோமாயின் கடவுளும் உலகமும் கண்டப்பொருள்களென்று சொல்லவந்து, கடவுள் ஒரு இடத்தும் உலகு ஒரு இடத்தும் இருப்பனவாகி, கடவுளிருக்குமிடத்து உலகமில்லையென்றும், உலகம் இருக்குமிடத்துக் கடவுளில்லையென்றும் கூறுதற்கிடனாகும். இவரே மற்றொரு சார்பாகச் சேதனாசேதன வுலகை யிரண்டாக்கி உயிரொன்றும் பஞ்சபூத வுலகென்று மொப்பி, கடவுள் ஒருபொருளும், உயிர் ஒரு பொருளும், உலகு ஒரு பொருளுமாக முப்பொருள்கூறி, ஷை முப்பொருளுஞ் சத்தென்கின்றனர். அவ்வாறு பகருமிடத்து மூன்றிலொருபாகத்தில்கடவுளும், மூன்றிலொருபாகத்தில் உயிர்த்தொகுதியும், மூன்றிலொருபாகத்தில் உலகு மிருப்பனவாய் ஒத்துக்கொள்ளத்தக்கவராகின்றனர். இவ்வாறுரைப்பது மிக எளிதாயினும் கடவுளுக்குப் பரிபூரணத்துவஞ் சொல்பவர் இதையொருபோது மொப்பமாட்டார். ஒப்புதலுஞ் செய்யாது மூன்று பொருளுக்குச்சத்துங் கூறவேண்டுமானால் யுக்தி அநுபவங்கட்கு விரோதமாகும்.

முதலாவது கொள்கையின்படி பார்க்கின் இந்த ஆக்ஷேபங்களெல்லா முண்டாதலில்லை. இந்தக்கொள்கைப்படி கடவுளுக்குப் பரிபூரணமுஞ்சித்திக்கின்றது; உயிரும் பஞ்சபூத உலகமுமிருத்தற்கிடனுமாகின்றது. ஒரு பொருளினிடத்து மற்றொரு பொருளிருத்த லெங்ஙனமமையுமெனின் ஒரு சத்துப்பொருளில் மற்றொரு சத்துப் பொருளிருத்தலமையாதேயன்றி யொரு சத்துப்பொருளில் மற்றொரு அசத்து அல்லதுசத்துப்போலிப் பொருளிருத்தற்கு விரோதம் எதுமில்லையே. அவ்வாறிருக்கு மென்பதற்கு அனேக திருட்டாந்தங்களிருக்கின்றன. அவைகளான: கயிற்றின்கண் அரவு, இப்பியில் வெள்ளி, கானலின்கண் நீர், இந்திரசாலத்தில் பொருள், மனத்தினிடத்துச் சொப்பன வுலகு முதலியனபோலாம். உலகத்துக்கு மலடி மைந்தன் முதலிய திருட்டாந்தமும் கூறப்படுகின்றது. இவைகளெல்லாம் ஒவ்வொரு அவசரத்துக்கு ஒவ்வொரு திருட்டாந்தமாம். உலகம் பொய் யென்பது வரையில் மலடி மைந்தன் முதலிய திருட்டாந்தமாம்; அதிஷ்டானத்தைத்தவிர ஆரோபமில்லை யென்பது வரையில் கயிற்றின்கண்

அரவு இப்பியின்கண் வெள்ளி முதலிய திருட்டாந்தங்களாம்; அதிஷ்டானத்தைத் தவிர ஆரோபமில்லையென்று தெளியினும் ஆரோபம் தோற்றிக்கொண்டுதா னிருக்கும் என்பது வனாயில் கானனீர் முதலிய திருட்டாந்தங்களாம்; அவ்வாறு தோற்றினும் நீர் அநுபவத்திற்கு வரவில்லையென்றும், உலகம் அனுபவத்துக்கு வருகிறதென்றும், ஆதலால் உலகத்துக்குக் கானனீர் திருட்டாந்தம் பொருந்தாதென்றும் சொல்லி ஆக்ஷேபஞ் செய்பவர்க்குச் சொப்பனமுதலிய திருட்டாந்தங்களாம். இன்னும் இவ்வாறு சொல்லும் பல திருட்டாந்தங்களும் அவசரபேதமென்று தெரிந்துகொள்ளவேண்டியது.

"கயிற்றின்கண் அரவு முதலியவை கயிற்றிற்கும் அரவுற்கும் அபின்னமானமையின் பரிபூரண தோஷமில்லையென் றுரைப்பது பொருந்தும்; மனமும் சொப்பனவுலகும் வேறுவேறாகக்காணப்பட்டுவேறு வேறு இடத்திலிருப்பதால் கயிறும் அரவு மொன்றுபட்டிருப்பது போல் இருக்கிறதென்று எவ்வாறு கூறலாம்" என்னில் சமாதானங் கூறுவாம். மனமும் சொப்பனவுலகமும் வேறுவேறாய்க் காணப்பட்டாலும் ஒன்றென்று சொல்வதற் கியையும். எங்ஙனமென்னின் மிக அன்பாய் வளர்க்கப்பட்டு இறந்துபோன பிள்ளையைத் தாய்தந்தைகள் நினைப்பார்களாயின் அவர்கள் மனத்திற்கு அப்பிள்ளை தோன்றும்; தோன்றும் அப்பிள்ளை, வேறாகத் தோன்றினும் வேறன்று. அவ்வாறே மனத்தினின்றுந் தோன்றிய சொப்பனவுலகம் வேறுபோல் தோன்றினும் வேறன்று. வேறுபோல் தோன்றுதற்குக் காரணமேதெனின் மனத்தின்கண் பின்னுசத்தி அபின்னுசத்தியென இரண்டு சத்திகளுள்ளன. அபின்னுசத்தி மனத்தினிடத்துள்ள அறிவு; பின்னு சத்தி சொப்பனவுலகம். சொப்பனவுலகு பின்னுசத்தியின் காரியமாகலின் வேறுபோல் தோன்றும்; தோன்றுவதோடு அப்பிரபஞ்சத்திலுள்ள பல ஜீவர்களுடைய இன்பத் துன்பங்கள் தன்னைச் சாருவதுமில்லை. அப்படியிருந்தும் மனத்தைத்தவிர வேறில்லை; ஒன்றுதான். சொப்பனவுலகுக்கு முதற்காரணம் மனம். முதற்காரணத்துக்கும் காரியத்திற்கும் அபின்னமே. எது பின்னுசத்தியின் காரியமோ அது பேதமாய்த்தான் காணப்படும். காணப்பட்டாலும் அக்காரியம் காரணத்தி லொடுங்கிவிடுவதால் அபின்னமேயாம். எது பின்னுசத்தியின் காரியமோ அது அசத்து அல்லது சத்துப்போலியேயாம். இவ்வாறே கடவுளிடத்து இந்தச் சாக்கிரவுலகம், சொப்பனவுலகம் போல் அசத்து அல்லது சத்துப்போலியாயும் தோற்றல் மாத்திரமாயுமிருத்தலால் கடவுளுக்குப் பரிபூரணதோஷம் வாராமை யறிக.

உலகம் அசத்து என்றுரைப்பதால் மலடிமைந்தன் ஆகாய தாமரையைப்போல் முற்றும் பொய்யென்று ஆராய்ச்சியும் கேள்வியுமில்லாச் சிலர் நினைக்கிறார்கள். அதுதெரியாமை! மலடி மைந்தனும் அசத்துத்தான்; கயிற்றரவும் அசத்துத்தான்; கானனீரு மசத்துத்தான்;

சொப்பனவுலகமும் அசத்துத்தான். இவைகளில் ஒவ்வொன்று ஒவ்வொரு அவசரத்துக்குத் திருஷ்டார்த்தமாகச் சொல்லப்படுகின்றதென முன்னரோ கூறினும். ஆண்டுக் கண்டுகொள்க. அசத்தில் இவ்வளவு தாரதம்மியங்க ளிருக்கின்றமையால் ஒன்றுக்கொன்று பேதந் தெரியாதபடி மொத்தமாய் உலகத்தை முற்றும் பொய்யென்றுரைக்கப்படாது.

கயிற்றின்கண் அரவு சத்தா? அசத்தா? சதசத்தா? இக்கேள்விக்குச் சத்தெனின் சத்தென்பதற்குப் பொருள் உள்ளதாதலால் கயிறென்றறிந்தபின்னரு முளதாதல் வேண்டும்; அங்ஙனமிராமையின் சத்தென்றுரைத்தல் கூடாது. அசத்தெனின் அசத்தென்பதன் பொருள் இலதாமாதலால் மலடிமைந்தன் தோன்றாதிருத்தல்போல் அரவு தோன்றாமலே யிருத்தல்வேண்டும். தோன்றுதலால் அசத்தென்றுஞ் சொல்லுதல் கூடாது. சதசத்தென்று சொல்லலாமென்னில் சத் சத்து என்பதன் பொருள் உளது இலது ஆதலாலும் ஒன்றுக்கொன்று நேர்விரோதமான இலக்கண மமையப்பெற்ற பொருள் இராதாதலாலும் சதசத்தென்றுங் கூறுத லமையாது. அன்றி எது சதசத்தோ அது உண்மையில் அசத்தேயாம். கயிற்றரவு முன்புசத்து; சோதனையில் அசத்து. அது உண்மையில் அசத்தேயாம். பின்னைப் போம் வழி யாதெனின் இன்னதன்மைத்தெனச் சொல்லுதற்கமையாத சத சத்விலக்ஷண அநிர்வசனீயமென்று கூறுதலே அமைவுடைத்து. இத இலக்கணத்தையே சொப்பன வுலகத்திற்கும் சொப்பன வுலகத்தை யுவமானமாகக்கொண்ட சாக்கிரவுலகத்திற்கும் சொல்லத் தகுதியாம். இவ்வாறு கூறுவதனால் கடவுளுக்கும் பரிபூரணஞ் சித்திக்கின்றது; உயிர் உலகங்களுக்கும் இருப்பு ஏற்படுகின்றது. ஆதலால் முதல் வகுப்பு ஆஸ்திகர் கூற்றே கூற்று; மற்றவர் கூற்றெல்லாம் கூற்றாகா.

இதனாற் றேர்ந்ததியாதெனின் முதல்வகுப்பு ஆஸ்திகர் முழு ஆஸ்திகராம். இரண்டாவது வகுப்பு ஆஸ்திகர் கடவுள், உயிர், உலகமாகிய முப்பொருளுக்குஞ் சத்துத் தன்மைகூறிக் கடவுளுக்கு மூன்றிலொருபங்கு இடத்தைக் கொடுக்கின்றமையால் மூன்றில் ஒருபங்கு ஆஸ்திகராம்; ஒருபங்குபோக மற்ற இரண்டுபங்கு இடத்தை யுயிர் உலகங்களுக் கெடுத்துக் கொண்டமையால் ஒருபங்கு ஆஸ்திகரென்று கூறுவதோடுகூட இரண்டுபங்கு நாஸ்திகரென்றுஞ் சொல்லத்தக்கவராம். மற்ற நாஸ்திகரோ உலகமாத்திரமுள்ளது; கடவுளில்லவே யில்லையென் றுரைப்பதனால் அவர் முழு நாஸ்திகராம்.

---